# இஸ்லாம் எல்லோர்க்கும்



Dr. எம்.எம்.அப்துல் காதிர் உமரீ

*வெளியீட்டு எண்: 15*

# இஸ்லாம் எல்லோர்க்கும்

ஆசிரியர்
மவ்லவீ. **Dr. M.M.** அப்துல் காதிர் உமரீ
(திருக்குர்ஆன் மொழிபெயர்ப்பாளர் IPRC)

வெளியீடு:
**IPRC**
**இஸ்லாமியப் பதிப்பகம்**
**மற்றும் ஆய்வு மையம்**
**ISLAMIC PUBLICATIONS & RESEARCH CENTRE**

# இஸ்லாம் எல்லோர்க்கும்


| | | |
|---|---|---|
| பொருள் | : | இஸ்லாம் குறித்த அறிமுக நூல் |
| ஆசிரியர் | : | மவ்லவீ Dr. M.M. அப்துல் காதிர் உமரீ<br>Moulavi Dr. M.M. Abdul Kadir Umari |
| பக்கங்கள் | : | 32 |
| பிரதிகள் | : | 2000 |
| முதல் பதிப்பு | : | ஜுமாதுல் அவ்வல் 1442 - டிசம்பர் 2020 |
| வடிவமைப்பு | : | ஸஃபா கிராஃபிக்ஸ், மதுரை-20.<br>9364414441. |
| வெளியீடு | : | இஸ்லாமியப் பதிப்பகம் மற்றும் ஆய்வு மையம், மதுரை-625020. 9364414441.<br>மின்னஞ்சல்: iprcindia2000@gmail.com |
| **விலை** | **:** | **ரூபாய் 25/-** |

***ISLAM ELLORUKKUM***

▣ *Author: MOULAVI, DR. M.M. ABDUL KADIR UMARI*
▣ *First Edition: J. Awwal 1442 Hijri - December 2020* ▣ *Copies 2000*
▣ *Publications: IPRC, Madurai - 625020. Ph: +91-93644-14441*
*E-mail: iprcindia2000@gmail.com*

***Price: INR 25/-***

*அளவற்ற அருளாளன், நிகரற்ற கருணையாளன்*
*அல்லாஹ்வின் பெயரால்...*

# பதிப்புரை

*புகழனைத்தும் ஏக இறைவனுக்கே!*

*நம் நாடு ஒரு வல்லரசாய் இருக்கவேண்டும். இது தேசவெறியோ, தேசியவாதத்தின் வெளிப்பாடோ அல்ல. நம் நாட்டு மக்கள் நலனைக் கருத்தில் கொண்ட ஒரு குடிமகனின் அவா! இதற்காக நாம் ஒரு சரியான திசையை நோக்கிப் பயணிக்கவேண்டும்.*

*பல்வேறு மொழிகளையும், மாநிலங்களையும், கலாச்சாரங்களையும் கொண்டுள்ள நாம் வேற்றுமையிலும் ஒற்றுமை என்ற பன்முகத் தன்மை கொண்டவர்கள். ஆனால், நம் நாட்டில் 2500 க்கும் அதிகமான சாதிகளாக மக்கள் பிரிந்து கிடக்கிறார்கள். நம் தேச மக்கள் 'ஒன்றே குலம் ஒருவனே தேவன்' என்ற கொள்கையின்படி வாழவேண்டும். ஒவ்வொரு மனிதனின் உரிமைகளும் மானமும் காக்கப்பட வேண்டும். மனிதர்களைப் பிரித்தாளும் சூழ்ச்சிக்கு யாரும் பணியக் கூடாது. நாம் இந்நிலையை அடைந்தால் உலகில் நாமே வல்லரசு. நம்மை எந்த சக்தியாலும் பிரித்தாள முடியாது. இதற்கான வழியை நியாய உணர்வோடு தேடுவதே* **இஸ்லாம் எல்லோர்க்கும்** *என்னும் இச்சிற்றேடு.*

*குலங்கள், கோத்திரங்கள் நம் அடையாளச் சின்னங்கள்; இவை நம்மைத் துண்டாட, ஆதிக்கம் செலுத்த, அடக்கியாள, இழிவுபடுத்தப் பயன்படக் கூடாது. நம் இந்திய தேசம் இவ்வாறான உயர்ந்த நிலையை அடைவதற்கு இஸ்லாம் ஒன்றே சிறந்த வழி என்பதை இந்நூலின் ஆசிரியர் Dr. M.M. அப்துல் காதிர் உமரீ நிறுவுகிறார்.*

*நூலாசிரியருக்கும், இந்நூல் வெளிவரத் துணைநின்றோருக்கும், எல்லாம் வல்ல இறைவனுக்கும் நன்றியினைத் தெரிவிக்கிறோம். உயர்ந்த உள்ளங்களாக நம்மை இறைவன் ஆக்கட்டும்!*

*அன்புடன்*
***Dr. சையது அலீ ஃபாத்திமா***
*நிறுவனர், இஸ்லாமியப் பதிப்பகம் மற்றும் ஆய்வு மையம்* ***(IPRC)***

*மதுரை*
*10.12.2020*

# பொருளடக்கம்...

# இஸ்லாம் எல்லோர்க்கும்

*இஸ்லாம், முஸ்லிம் என்றாலே உலகமே திடுக்கிட்டுத் திரும்பிப் பார்க்கும் அளவிற்கு வதந்திகள் பரப்பப்பட்டுள்ளன; ஒரு சாரார் தொடர்ந்து இதைப் பரப்பிக்கொண்டே இருக்கிறார்கள். இனவாதத்தின் அடையாளம், அமைதிக்கு எதிரானது, பிற்போக்குத் தனமானது என இஸ்லாம் சித்தரிக்கப்படுகிறது. நாம் நீதிமான்கள்; எதுவானாலும் சரி அதன் உண்மை நிலை மற்றும் தன்மையை அறியாமல் வதந்திகளை மட்டும் உள்வாங்கமாட்டோம்.*

*தூக்குத் தண்டனைக் கைதிக்குக் கூட தண்டனையை நிறைவேற்றுவதற்கு முன்னதாக உன் தரப்பு நியாயத்தை நீ கூறலாம் என ஒரு வாய்ப்பு அளிக்கப்படுகிறது. எனவே, இஸ்லாம் குறித்து, அது என்ன சொல்கிறது? அது யாருக்கானது என்பன குறித்து சற்றேனும் சீர்தூக்கிப் பார்ப்பதே நியாயமாகும்.*

*இஸ்லாம் எனக்கு மட்டுமே உரியது என ஒரு முஸ்லிம் நினைப்பதே குற்றம். உலகில் வாழுகிற ஒவ்வொரு மனிதனுக்கும் இஸ்லாம் ஒரு பொதுச் சொத்தாகும்.*

*திருக்குர்ஆன் என்னும் இவ்வேதம் மனிதர்களுக்குத் தெளிவான வாழ்வியல் வழிகாட்டியாகும்; தெளிவான அத்தாட்சிகளைக் கொண்டதாகும்; நன்மை தீமையைப் பிரித்து அறிவிப்பதாகவும் இருக்கிறது... (திருக்குர்ஆன் 2:185)*

*இஸ்லாம், மனிதர்களுக்கான இறைமார்க்கம்; திருக்குர்ஆன், மனிதர்களுக்கான வாழ்வியல் வழிகாட்டி. அதன்படி சுமார் 53 ஆண்டு காலங்கள் ஒரு சமூகம் வாழ்ந்து வழிகாட்டிச் சென்றது.*

*திருக்குர்ஆன் அரபுமொழி அமைந்துள்ள மந்திரச் சொற்கள் அல்ல; அது கவிதைத் தொகுப்பும் அல்ல; கற்பனைக் காவியமும் அல்ல. ஆன்மிகம், குடும்பம், சமூகம், அரசியல், பொருளாதாரம், வணிகம், இராணுவம், பாதுகாப்பு, சுதந்திரம், அண்டை அயலார், உறவுகள் மற்றும் நாட்டு மக்களுக்கான உரிமைகள் கடமைகள், தொழில் நியதி, நிதி, நீதி, துறைசார்ந்த சட்டவிதிகள் என மனித வாழ்க்கைக்குத் தேவையான முழுமையான வாழ்வியல் நூலே திருக்குர்ஆன்.*

*நம்மையும் நாம் உலகில் காணும் ஒவ்வொன்றையும் படைத்தவன் ஒரே இறைவன். அந்த இறைவனே இச்சட்ட நூலை மனிதர்களுக்கு வழங்கியுள்ளான். உலக மக்கள் அனைவருக்கும் இதில் உரிமை உள்ளது. இது இறைவன் அளித்துள்ள உரிமை.*

*எனவேதான், பல இடங்களில் “மனிதர்களே!” என திருக்குர்ஆன் அழைக்கிறது. இதோ உதாரணத்திற்குச் சில வசனங்கள்:*

*மனிதர்களே! நீங்கள் இறையச்சம் உள்ளவர்களாய் ஆவதற்கு, உங்களையும், உங்களுக்கு முன்னிருந்தவர்களையும் படைத்த உங்கள் இரட்சகனை (மட்டும்) வணங்குங்கள்! (திருக்குர்ஆன 2:21)*

*மனிதர்களே! உங்களை ஓர் ஆண், ஒரு பெண்ணிலிருந்தே நாம் படைத்தோம். நீங்கள் ஒருவரை ஒருவர் அறிந்து கொள்வதற்காக உங்களைக் கிளைகளாகவும், கோத்திரங்களாகவும் ஆக்கினோம். உங்களில் இறைவனை முறையாக அஞ்சி வாழ்பவரே இறைவனிடம் மிகவும் கண்ணியமானவர்... (திருக்குர்ஆன் 49:13)*

*மனிதர்களே! பூமியிலுள்ளவற்றில், அனுமதிக்கப்பட்ட, தூயவற்றை உண்ணுங்கள்! ஷைத்தானின் அடிச்சுவடுகளைப் பின்பற்றாதீர்! நிச்சயமாக அவன் உங்களின் பகிரங்கப் பகைவன். (திருக்குர்ஆன் 2:168)*

*இன்னும் ஏராளமான வசனங்கள் உள்ளன. நூலின் சுருக்கம் கருதி அவற்றின் எண்கள் மட்டும் இங்கு தரப்படுகின்றன; அவற்றைக் காண்க! 4:1, 170, 174. 7:158, 10:23, 57, 104, 108. 22:1, 5, 49, 73. 27:16 31:33, 35:3, 5, 15. 49:13.*

## இஸ்லாம்

பொதுவாகவே மதங்கள் ஒரு தனி நபரின் பெயரிலோ, நாட்டின் பெயரிலோ, மொழியின் பெயரிலோ அல்லது ஒரு வம்சாவழியின் பெயரிலோ அமைந்துள்ளன; அல்லது அமைக்கப்பட்டுள்ளன. ஆனால், இஸ்லாம் அப்படியல்ல.

‘இஸ்லாம்’ இது ஓர் அரபுச் சொல்; ‘அமைதி, இறைவனுக்கு மட்டுமே கட்டுப்படுதல், தூய்மை’ என்பது இதன் பொருள்.

இறைவன் வழங்கியுள்ள சட்டங்களின்படி மனிதன் வாழவேண்டும். உலகம் முழுக்க அமைதியை ஏற்படுத்த வேண்டும். இதுவே இதன் அடிப்படை நோக்கம்.

நம்மையும் நாம் வாழ்கிற இந்த உலகில் உள்ள ஒவ்வொன்றையும் ஒரே இறைவன்தான் படைத்தான்; அவற்றை அவனே பாதுகாத்தும் வருகிறான். அந்த ஒரே இறைவனுக்கு மட்டுமே அடிபணிந்து வாழ்பவர் ‘முஸ்லிம்’ என அழைக்கப்படுகிறார். முஸ்லிம் என்பது ஒரு தனி இனத்தின் பெயரோ, மதவாதியின் பெயரோ அல்ல. ஏக இறைவனுக்கு மட்டுமே கட்டுப்பட்டு, அவனை மட்டுமே

வணங்கி, இறைவழிகாட்டுதலின்படி உலகில் அமைதியை நிலைநாட்ட முயல்வோர் அனைவரும் முஸ்லிம்களே.

இவ்வுலகில் உள்ள ஒவ்வொன்றும், விண்மீன்கள் முதல் மண் புழுக்கள் வரை இறைவனின் சட்டவிதிகளுக்கு உட்பட்டே செயல் படுகின்றன. உலகிலுள்ள ஒவ்வொன்றும் இறைவன் அளித்துள்ள வாழ்வியலின் அடிப்படையிலேயே வாழ்கின்றன. இவற்றிற் கிடையில் இனவாதப்போர் நடப்பதில்லை; இவை இறைவனுக்குக் கட்டுப்பட மறுப்பதில்லை.

மனிதனும் பிறக்கும்போது இறைவனுக்கு கட்டுப்பட்டவனாகவே பிறக்கிறான். மனித உடல் மற்றும் உடலில் உள்ள அங்க அவயங்கள் இறைவனுக்கு கட்டுப்பட்டே இயங்குகின்றன. இறைவனுக்குக் கட்டுப்பட அவை ஒருபோதும் மறுப்பதில்லை. அப்படி மறுத்தால் மனிதனால் வாழவே முடியாது.

தான் விரும்பியவாறு வாழும் உரிமையை மனிதன் பெற்றுள்ளான். இரண்டு வழிகள் இருப்பின் ஒருவழி நேர்வழியாகவும் மற்றொரு வழிதவறானதாகவே இருக்கும். இதில் நேர்வழியைத் தேர்வு செய்வதே மனிதனுக்குச் சிறப்பு. எனவே, மனிதனை நேர்வழியான இறைவனின் கட்டளைகளுக்கு முற்றிலும் அடிபணிந்து வாழச் செய்வதே இஸ்லாமின் நோக்கமாகும். இதன் மூலமாக மட்டுமே தனி மனித மற்றும் சமூக அமைதிக்கான உத்தரவாதம் அளிக்க முடியும்.

மனிதனுக்கு, மனிதன் இயற்றித் தரும் சட்டங்கள் குறையுடையவை. அவற்றால் மனித வாழ்க்கையில் ஏற்படும் பிரச்னைகளுக்கு ஒருபோதும் முழுமையான தீர்வு கிடைக்காது. எனவேதான், இறைக்கட்டளைக்கு மட்டுமே மனிதன் கட்டுப்பட்டு வாழ வேண்டும் என்ற நிபந்தனையை இறைவன் ஏற்படுத்தியுள்ளான்.

## இறைச்சட்டம்

இறைச்சட்டம் எது? அது எங்கே இருக்கிறது என்பதே நம் அடுத்த கேள்வியாக இருக்கமுடியும்.

பல்வேறு மதங்கள் மற்றும் கொள்கைகளைச் சார்ந்தவர்கள் தாங்கள் வைத்திருக்கும் நூல்களை இறைவேதம் என்றும் அவற்றில் இடம் பெற்றுள்ளவை இறைச்சட்டங்கள் என்றும் நம்பி வருகிறார்கள். இந்த வரிசையில் முஸ்லிம்கள் தாங்கள் வைத்துள்ள திருக்குர்ஆனை இறைவேதம் என்றும் அதிலுள்ளவை இறைச் சட்டங்கள் என்றும் நம்பிவருகிறார்கள்.

வேதங்கள் என்ற பெயரில் உலகில் காணப்படும் எல்லாவற்றையும் இறைவேதம் என ஏற்றுக்கொள்ளலாமா? அல்லது திருக்குர்ஆன் மட்டுமே இறைவேதம் என ஏற்றுக்கொள்ள வேண்டுமா என்ற ஒரு கேள்வியும் நமக்கு எழுவது இயல்பே.

திருக்குர்ஆன் மட்டுமே இறைவேதம் என வாதிடுதல் இஸ்லாமிய கண்ணோட்டத்தில் முற்றிலும் தவறு. திருக்குர்ஆன் இறைவனின் இறுதிவேதம்; இதற்கு முன்பு பல வேதங்களை இறைவன் தன் தூதர்கள் மூலமாக மனிதர்களுக்குக் கொடுத்திருந்தான்; ஆனால், மனிதர்களில் சிலர் தங்களுக்குச் சாதகமாக அமையும் வகையில் அந்த வேதங்களை மாற்றி அமைத்துக் கொண்டார்கள். இவ்வாறு நம்புவதே மிகச் சரியானது. இதை பின்வருமாறு திருக்குர்ஆன் கூறுகிறது.

“ஏக இறைவனின் ஆணைப்படி உம் இதயத்தில் இந்தக் குர்ஆனை வானவர் ஜிப்ரீல்தாம் முஹம்மத் ஆகிய உம் உள்ளத்தில் இறக்கினார். இது, தனக்கு முன்சென்ற வேதங்களை மெய்ப்பிப்பதாகவும், இறைவனை மட்டும் நம்பி வாழ்வோருக்கு நேர்வழிகாட்டியாகவும், நற்செய்தியாகவும் உள்ளது.” (திருக்குர்ஆன் 2:97)

உங்களுக்கு முன் நிச்சயமாக பல வழிமுறைகள் சென்றுள்ளன. எனவே, நீங்கள் பூமியில் சுற்றி வந்து - வரலாறுகளைப் படித்து, பொய்ப்பித்தவர்களின் முடிவு என்ன ஆயிற்று என்பதைப் பாருங்கள். இந்தக் குர்ஆன் மனிதர்களுக்குத் தெளிவான விளக்கமாகவும், இறையச்சம் உள்ளவர்களுக்கு முறையான வழிகாட்டியாகவும், நற்போதனையாகவும் இருக்கிறது. (திருக்குர்ஆன் 3:137,138)

இதற்கு நாம் ஓர் உதாரணத்தை முன்வைக்கலாம்.

நீங்கள் ஒரு பெருநிறுவனத்தின் முதலாளி; உங்களுக்குக் கீழ் பலர் பணியாற்றி வருகிறார்கள். உங்கள் நிறுவனத்திற்கு சில விதி முறைகளை நீங்கள்தான் கொடுக்க வேண்டும். அதை நீங்கள் கொடுக்கிறீர்கள்.

உங்கள் நிறுவனம் எப்படி இயங்க வேண்டும்? உங்கள் நிறுவனத்தில் உள்ளவர்கள் எப்படி பணியாற்ற வேண்டும் என்பதற்கானவிதி முறைகள் கட்டாயமாய் உங்களிடம் இருக்கவேண்டும். உங்கள் நேரடிப் பார்வையில் இருக்கும், நம்பிக்கைக்குரிய, நியாயமான உங்கள் செயலரிடம் நீங்கள் அந்த விதிமுறைகளை அளிக்கிறீர்கள். அதை நிறுவனத்தில் உள்ள ஒவ்வொருவருக்கும் கொண்டு சேர்க்குமாறு அவரிடம் கட்டளையிடுகிறீர்கள். அவரும் அதைப்

*பெற்று நீங்கள் கட்டளைப்படியே நிறுவனத்தில் உள்ள அனைவரிடம் அதைக் கொண்டுபோய்ச் சேர்த்துவிடுகிறார்.*

*நீங்கள் கொடுத்திருக்கும் விதிமுறைகளை யாரும் மீறக்கூடாது. அந்த விதிமுறைகளை உங்கள் பணியாளர்கள் சரியாகக் கடை பிடிக்க வேண்டும். நீங்கள் அளித்துள்ள விதிமுறைகளின்படியே உங்கள் நிறுவனம் குறிப்பிட்ட ஒரு காலம் வரை இயங்கிவருகிறது.*

*உங்கள் நிறுவனத்தில் முக்கியப் பொறுப்புகளில் இருக்கும் சிலர் நீங்கள் அளித்துள்ள விதிமுறைகளைத் தங்களுக்குச் சாதகமாகப் பயன்படுத்திக் கொள்ள நினைக்கிறார்கள். ஆனால், உங்கள் விதி முறை அதற்குச் சாதகமாய் இல்லை. இந்நிலையில், நீங்கள் கொடுத் திருக்கும் சட்டங்களை தங்களுக்குச் சாதகமாய் அவர்கள் மாற்றிக் கொள்கிறார்கள். நீங்கள் கொடுத்த விதிமுறைகள் உங்கள் நோக்கத்திற்கு மாற்றமாக திருத்தப்படுகின்றன; சில விதிகள் நீக்கப்படுகின்றன; புதிதாக சில விதிகள் இணைக்கப் படுகின்றன. இப்போது நீங்கள் என்ன செய்வீர்கள்?*

*கண்டு கொள்ளாமல் அப்படியே அதை விட்டுவிடுவீர்களா? அல்லது அந்த விதிமுறைகளை மீண்டும் சீரமைத்துப் புதிதாகக் கொடுப்பீர்களா?*

*ஆம்! அந்த விதிமுறைகளை மீண்டும் சீரமைத்தே கொடுப்பீர்கள். அது மட்டுமல்லாமல் உங்கள் விதிமுறைகளை மாற்றி அமைத்த வர்களை உங்கள் நிறுவனத்தில் இருப்பவர்களிடம் அடையாளம் காட்டுவீர்கள்; அது பெரும் குற்றம் என்பதை உணர்த்துவீர்கள்; இயன்றால் அதற்குத் தண்டனையும் கொடுப்பீர்கள்.*

*நான் முன்பு உங்களுக்காகக் கொடுத்திருந்த என் விதிமுறைகளை சிலர் சிதைத்துவிட்டனர். அவை நான் கொடுத்திருந்த விதிமுறை களே என்றாலும், தற்போது அவை சிதைக்கப்பட்டிருப்பதால், அவற்றை யாரும் பின்பற்ற வேண்டாம். நான் இப்போது புதிதாகக் கொடுத்திருக்கும் இவ்விதிமுறைகளையே நீங்கள் பின்பற்ற வேண்டும்; இவ்விதிமுறைகளை என்னுடைய இந்தச் செயலரிடம் கொடுத்துள்ளேன்; அவற்றைப் பெற்றுக் கெள்ளுங்கள் என்பதை விளக்குவீர்கள் அல்லவா?*

*ஆனால், நீங்கள் இரண்டாவதாகக் கொடுத்த விதிமுறைகளும் சில காலங்கள் சென்ற பின்னர் சிலரால் மாற்றி அமைக்கப்படு கின்றன என வைத்துக்கொள்வோம். இப்போதும் நீங்கள்*

மீண்டும் தலையிட்டு, முன்னர் மேற்கொண்ட அதே நடவடிக்கை களைத் தானே மேற்கொள்வீர்கள்.

இவ்வாறே தொடர்ந்து நடந்துவந்தால், நீங்கள் ஓர் இறுதி முடிவுக்கு கட்டாயமாக வருவீர்கள். இனிமேல் நான் கொடுக்கும் விதிமுறைகளை யாரும் மாற்றி அமைக்கவோ, நீக்கிவிடவோ அல்லது புதிதாக ஒன்றைச் சேர்க்கவோ கூடாது என்பதில் உறுதியாய் இருப்பீர்கள்.

இப்போது நீங்கள் அளிக்கும் விதிமுறைகளை மிகவும் பாது காப்பாக அமைப்பீர்கள். இதுதான் இறுதியானது, இதற்குப் பிறகு வேறு எந்த விதிமுறையும் சேர்க்கவோ, நீக்கவோ தேவை இல்லை. இது முழுமை பெற்றதும், இறுதியானதும் ஆகும் என்பதைத் தெளிவாக அறிவிப்பீர்கள்.

உங்கள் நிறுவனத்தில் இருக்கும் சில சுயநலவாதிகள் நீங்கள் அளித்துள்ள இறுதியான, முழுமையான விதிமுறைகளுக்கு மாற்றமாக, நீங்கள் முன்பு அளித்திருந்த விதிமுறைகளையே இப்போதும் பின்பற்றினால், இப்போது நீங்கள் என்ன செய்வீர்கள்?

சரி! சரி!! அதுவும் நான் அளித்த விதிமுறைகள்தானே போனால் போகட்டும் என விட்டுவிடுவீர்களா?

அதை ஒருபோதும் அனுமதிக்கமாட்டீர்கள் அல்லவா? அதையும் மீறி உங்களின் பழைய விதிமுறைகளைப் பின்பற்றுவோரைத் தண்டிக்கவும் தவறமாட்டீர்கள் அல்லவா?

இதுபோன்றுதான் இறைவேதங்களின் உதாரணமும் உள்ளது.

முதல் மனிதன் ஆதம் மற்றும் ஹவ்வா ஆகிய இருவரும் படைக்கப் பட்டு உலகிற்கு அனுப்பப்பட்டார்கள். அவர்கள் இருவரின் மூலமாக மனித குலம் உருவாயிற்று. அந்த ஆரம்ப காலத்தில் மக்கள் அனைவரும் இறைவனுக்குக் கட்டுப்பட்டவர்களாய் இருந்தார்கள். அனைத்தையும் படைத்த ஒரே இறைவனை மட்டுமே அவர்கள் வணங்கிவந்தார்கள்; படைப்பினங்களை வணங்கவில்லை. கல்லையோ, மண்ணையோ, சிலையையோ கடவுள் என அவர்கள் கருதவில்லை.

மனிதர்கள் அனைவரும் ஒரே சமுதாயமாய் இருந்தார்கள். அவர்களுக்குள் வேற்றுமை இல்லை; ஏற்றத்தாழ்வு இல்லை. சாதிகள் இல்லை; மதங்கள் இல்லை; மனிதம் மட்டுமே இருந்தது. அந்த மனிதம் இறைவனுக்கு மட்டுமே அடிபணிந்து வந்தது.

முறையான ஒரு தலைமையின் வழிகாட்டுதலின்படி இறைச் சட்டங்களைப் பின்பற்றி அந்த மக்கள் வாழ்ந்தார்கள்.

பின்னர், மனிதனின் பகிரங்க விரோதி ஷைத்தானின் (சாத்தானின்) சூழ்ச்சியால் கொஞ்சம் கொஞ்சமாக வாழ்க்கைத் தடுமாற்றத்தில் சிக்கித் தவித்தார்கள்; பாவங்கள் செய்யத் தொடங்கினர்; இறைவனை மறுக்கத்தொடங்கினர்; இறைவனுக்கு இணையாக படைப்பினங்களையும் வணங்க ஆரம்பித்தனர். கல்லையும், மண்ணையும், மரத்தையும், விலங்குகளையும் இன்னும் தாங்கள் விரும்பும் ஒவ்வொன்றையும் கடவுள் என நம்பி வணங்கத் தொடங்கினர். மனிதம் மறையத் தொடங்கியது; நிறம், மொழி, தேசம், அதிகார வர்க்கம், ஆளப்படும் வர்க்கம் என மனிதர்களுக் குள்ளேயே ஏற்றத் தாழ்வு தாண்டவமாடியது.

இப்படி தாங்கள் செல்லும் திசையை அறியாமல் வாழ்ந்த மக்களுக்கு ஒவ்வொரு காலக்கட்டத்திலும், அவர்களில் இருந்தே நல்லவர்களை இறைவன் தன் தூதர்களாகத் தேர்வு செய்தான். அவர்களின் மூலம் மனித குலத்திற்குத் தேவையான கொள்கைக் கோட்பாடுகளையும், சட்டங்களையும், வாழும் கலையையும் வேதமாக மக்களுக்கு இறைவன் கொடுத்துவந்தான். இறைவனின் அந்தத் தூதர்கள் தம் சமூகத்திடம் ஒரு முன்மாதிரியாக வாழ்ந்து வழிகாட்டினார்கள்.

இறைவன் கொடுத்த வாழ்வியல் சட்டங்கள் அடங்கிய வேதங்களை மனிதர்களில் அதிகாரம் வகித்தவர்கள் தங்களுக்கு ஏற்ற வகையில் சுயநலத்துடன் அவ்வப்போது அவற்றை மாற்றி அமைத்து வந்தார்கள். ஆரம்பம் இருப்பது போலவே எதற்கும் முடிவு ஒன்றும் இருக்க வேண்டும் அல்லவா? எனவே, அந்த அடிப் படையில் மாற்றியமைக்க முடியாத வகையில் இறுதியாக மனித குலத்திற்கான வாழ்வியல் சட்டங்கள் அடங்கிய ஒரு வேதத்தை இறைவன் அளித்தான். அந்த வேதம் திருக்குர்ஆன் ஆகும். இறைவனின் அந்த இறுதி வேதப்படி வாழ்ந்து வழிகாட்டுவதற்கு அனுப்பப்பட்ட இறைவனின் இறுதித்தூதர் முஹம்மத்(ஸல்) ஆவார்கள்.

ஒவ்வொரு மனிதனும் இச்சட்டங்களின் படி தன் வாழ்க்கையை அமைத்து உலக வாழ்க்கையிலும் மரணத்திற்குப் பின்னுள்ள வாழ்க்கையிலும் வெற்றி பெறுவதையே வாழ்க்கையின் இலட்சிய மாகக் கொள்ளவேண்டும்.

நமக்கு மிகவும் நெருக்கத்தில் உள்ள **(Updated)** விஷயங்களைத்

*தான் நாம் எடுத்துக் கொள்வோம். மிகவும் பிந்திய (Outdated) விஷயங்களை நாம் எடுத்துக் கொள்வதில்லை. அவ்வாறே வாழ்வியல் சட்டங்கள் அடங்கிய வேதங்களில் நமக்கு நெருக்கமாக உள்ள இறுதி வேதத்தை நம் வாழ்வின் வழிகாட்டியாக நாம் எடுத்துக் கொள்ளவதுதானே நியாயம்?*

*திருக்குர்ஆனின் சட்டங்கள் மற்றும் அதன்படி வாழ்ந்து காட்டிய இறைவனின் இறுதித்தூதர் முஹம்மத்(ஸல்) அவர்களின் வழிகாட்டுதல் நமக்கு மிகவும் நெருக்கத்தில் உள்ளது. எனவே, ஒரு மனிதன் இதன்படி வாழ்வதுதானே நியாயம்?*

*மனிதர்களால் மாற்றி அமைக்கப்பட்டு பாதுகாப்பை இழந்துள்ள பழைய வேதங்களாலோ, மனிதன் தானாக உருவாக்கியுள்ள சட்டங்களாலோ மனித சமூகத்தில் ஏற்படும் பிரச்னைகளுக்கு முழுமையான தீர்வை எப்படித் தரமுடியும்?*

*“இறைச்சட்டங்களுக்கு நிகரான ஒரு சட்டத்தை யாராலும் இயற்ற முடியுமா? முடிந்தால் கொண்டுவாருங்கள்!’’ என திருக்குர்ஆன் சவால் விடுகிறது. (காண்க: திருக்குர்ஆன் 2:23, 24)*

*இறைவேதங்களில் யார் எதைவேண்டுமானாலும் ஏற்றுக் கொள்ளலாம். அது, அவரவர் விருப்பம் அல்லது எல்லாவற்றையும் ஏற்றுக் கொண்டும் வாழலாம், அதுவும் அவரவர் விருப்பம். ஆனால், இறைவன் வழங்கியுள்ள ஒரு வேதம் சரியாகப் பாதுகாக்கப்பட்டுள்ளது என்றால் இன்னொரு வேதத்தை இறைவன் ஏன் கொடுக்க வேண்டும் என்பதை நிதானமாக யோசிக்க வேண்டும்.*

*எல்லோரும் இஸ்லாமை ஏற்றே ஆகவேண்டும் என்ற எந்த நிர்ப்பந்தமும் இல்லை. அது அவரவர் விருப்பத்தைப் பொறுத்தது. ஏற்றவர் ஈடேற்றம் அடைவார் என்றுதான் இஸ்லாம் கூறுகிறது.*

*(இஸ்லாம்) மார்க்கத்தில் நிர்ப்பந்தமில்லை. வழிகேட்டிலிருந்து நேர்வழி மிகத் தெளிவாகியது. எனவே, வழிகெடுப்பவற்றை நிராகரித்து அல்லாஹ்வை நம்புபவர் அறுந்துவிடாத வலுவான கயிற்றைப் பற்றிக்கொண்டார்... (திருக்குர்ஆன் 2:256)*

*இஸ்லாமை ஏற்றவர் தனக்கே நன்மை செய்கிறார் எனத் திருக்குர்ஆன் கூறுகிறது.*

*நீங்கள் நன்மை செய்தால், உங்களின் ஆன்மாக்களுக்கே நன்மை செய்கிறீர்கள். நீங்கள் தீமை செய்தால் அதுவும் உங்களுக்கே ஆகும். (திருக்குர்ஆன் 17:7)*

## எம்மதமும் சம்மதம்; சமாதானமா? சமாளிப்பா?

எந்த மதமாய் இருந்தால் என்ன? நாங்கள் எல்லாவற்றையும் ஏற்கிறோம் 'எம்மதமும் சம்மதம்' என சமாதானம் பேசுவோர், தாங்கள் ஏதோ சாதனை படைத்துவிட்டதாக நினைக்கலாம். உண்மையில் அவர்கள் எல்லோரையும் முட்டாள்களாய் ஆக்கி விடுகிறார்கள். எப்படி என்றால், நான் ஒரு வெண்மையான கைக் குட்டையை எடுத்து ஒரு சபையில் நின்று இது என்ன நிறம் என கேள்வியை எழுப்புகிறேன்.

உங்களில் ஒருவர் "பச்சை" என்கிறார்.

இன்னொருவர் "இல்லை; அது ஊதா" என்கிறார்.

இன்னும் ஒருவரோ, "இல்லை; அது மஞ்சள்" என்கிறார்.

வேறு ஒருவர், "இல்லை; அது வெள்ளை" என்கிறார்.

நான் உங்களுக்கு மத்தியில் தீர்ப்பளிக்கும் இடத்தில் இருக்கிறேன்.

''நீங்கள் எல்லோரும் சரியாகவே சொன்னீர்கள்'' என நான் சொல்கிறேன்.

என்னுடைய இந்தத் தீர்ப்பை சரியானதுதான் என நீங்கள் ஏற்றுக் கொள்வீர்களா? அல்லது, மிகச்சரியான விடையைச் சொன்னவர் தான் இதை ஏற்றுக் கொள்வாரா?

வெள்ளை என்பதே இதன் சரியான விடை என்ற உண்மையை நான் உரைப்பதுதானே நியாயம்? இதுபோன்றுதான் எம்மதமும் சம்மதம் என்பது ஒரு '**சரியான சமாளிப்பு**' என்பதைப் புரிந்து கொள்ளுங்கள்.

"இறைவன் ஒருவன்" என ஒரு மதம் சொல்கிறது.

"இறைவன் இரண்டு பேர்" என இன்னொரு மதம் சொல்கிறது.

"இறைவன் மூன்று பேர்" என இன்னொரு மதம் சொல்கிறது.

"இறைவன் 33 கோடி" என வேறு ஒரு மதம் சொல்கிறது.

இப்போது சொல்லுங்கள் "இது எல்லாமே சரிதான்" எனக் கூறுவது எந்த வகையில் நியாயம்? இவற்றில் ஏதாவது ஒன்றுதானே சரியாய் இருக்க முடியும்?

''இறைவன் ஒருவன்'' என்பதே மிகச் சரியானது. ஏனெனில், ஒருவனுக்கு தந்தை யார் என்ற சர்ச்சை இருந்தாலும், தாய் ஒருத்தி மட்டும்தான் என்பதில் எவ்வித மாற்றமும் இருக்காது. என்

கையை இந்தத் தாய் பெற்றெடுத்தாள்; என் காலை இந்தத் தாய் பெற்றெடுத்தாள்; என் தலையை இன்னொரு தாய் பெற்றெடுத் தாள்; என் உடலை இந்தத் தாய் பெற்றெடுத்தாள்; என்னை நான்கு தாய்மார்கள் பெற்றெடுத்தார்கள் என ஒருவன் கூறினால், அதை சரி என நாம் ஏற்போமா?

ஒருவனுக்கு ஒரு தாய்தான் இருக்க முடியும்; ஒன்றுக்கு மேல் இருக்கவே முடியாது. அவ்வாறே நம்மை ஒரே இறைவன்தான் படைத்துள்ளான். நம்மை பல கடவுளர்கள் படைக்கவில்லை.

இந்த உண்மையை விளக்குவதற்குத்தான் தன் தூதர்களை இறைவன் அனுப்பினான். அவர்களே இறைத்தூதர்கள்; அவர்களே மனித குலத்தின் வழிகாட்டிகள். அவர்களுக்கு இறைவன் அளித்தது தான் இறைவேதம். அப்படி வந்த தூதர்களில் இறுதியானவர் தாம் முஹம்மத்(ஸல்). இறுதி வேதம்தான் திருக்குர்ஆன்.

## மாற்றத்திற்கு உட்படாத திருக்குர்ஆன்

இறைவன் அளித்திருந்த மற்ற வேதங்களை சிதைத்ததுபோல இறைவனின் இறுதி வேதமான திருக்குர்ஆனை யாராலும் சிதைக்க முடியாது; அதைப் பாதுகாக்கும் பொறுப்பை இறைவன் ஏற்றுக் கொண்டான். எனவே, அது பாதுகாப்பாகவே இருக்கிறது.

திருக்குர்ஆன் ஆகிய இவ்வேதத்தை நாமே அருளினோம்; அதன் பாதுகாவலரும் நாமே. அதை மாற்றியமைக்க முடியாது. (திருக்குர்ஆன் 15:9)

இந்த உத்தரவாதம் வேறு எந்த வேதத்திற்கும் இறைவனால் அளிக்கப்படவில்லை. 1400 ஆண்டுகளுக்கு மேலாக இறைவேதம் குர்ஆன் மக்களிடம் வாசிக்கப்பட்டும், பின்பற்றப்பட்டும் வருகிறது. இன்று வரை அதில் ஒரு சிறு புள்ளி கூட மாற்றம் பெறாமல் இருக்கிறது.

திருக்குர்ஆனை அழித்தொழிக்க சிலர் திட்டம் தீட்டினார்கள்; அதைக் கிழித்தார்கள்; எரித்தார்கள் போன்ற செய்திகள் தற்போது ஊடகங்கள் மூலம் வெளியாகின்றன.

இன்று உலகத்தில் உள்ள திருக்குர்ஆன் பிரதிகள் ஒன்று விடாமல் அழிக்கப்பட்டுவிட்டாலும், அதை அடுத்த சில நிமிடங்களிலேயே சிறு புள்ளிகூட மாற்றமில்லாமல், எவ்விதக் கருத்து மாற்றமும் இல்லாமல், அதே வடிவில் மீண்டும் தொகுத்து விடலாம். அந்த

அளவிற்கு திருக்குர்ஆனை மனனம் செய்தவர்கள் இந்த உலகத்தில் இலட்சக்கணக்கில் வாழ்கிறார்கள். இவர்களை ஹாஃபிழ் - திருக்குர்ஆனை மனனம் செய்தவர்கள் என அழைக்கிறோம்.

குர்ஆனை மனனம் செய்துள்ளதுபோல இதுவரை உலகில் எந்த வேதமும் மனனம் செய்து இதயங்களில் பாதுகாப்பாக வைக்கப்பட வில்லை திருக்குர்ஆனுக்கு இறைவன் அளித்துள்ள பாதுகாப்பு அம்சங்களில் இதுவும் ஒன்று.

யாராலும் சிதைக்கமுடியாத நிலையில் திருக்குர்ஆன் இருப்பது, அது, இறைவனின் இறுதி வேதம் என்பதற்கான அத்தாட்சிகளில் ஒன்று..

இப்படி மாற்றியமைக்க முடியாத இறைவனின் இறுதி வேதம் திருக்குர்ஆன் நம்மிடம் இருப்பதாலும், உலக அளவில் ஏற்படும் ஒவ்வொரு பிரச்னைக்கும் முழுமையான தீர்வைத் தரக்கூடியதாய் அது இருப்பதாலும் நாம் அதைப் பின்பற்றி வாழ்வதுதானே நியாயம்? நாம் அதைப் புறக்கணித்தால் நம்மைப் படைத்து பாதுகாத்து வரும் இறைவன் நம்மை எதுவுமே கேள்வி கேட்காமல் விட்டுவிடுவானா? தண்டிக்காமல் விட்டுவிடுவானா?.

இந்தக் குர்ஆனை கண்மூடித்தனமாக ஏற்றுக் கொள்ளுங்கள்; சிந்திக்காதீர்கள் என இறைவன் கூறவில்லை. நன்றாகச் சிந்தித்துப் பாருங்கள்; நீங்கள் யார்? இந்த உலகத்தில் எப்படித் தோன்றினீர்கள்? இதற்கு முன்பு நீங்கள் எங்கு இருந்தீர்கள்? இனி நீங்கள் இறந்ததும் எங்கு செல்வீர்கள்? அங்கு என்ன செய்வீர்கள்? உங்கள் நிலை அங்கு எப்படி இருக்கும் என்பன போன்ற எல்லாவற்றையும் சிந்தியுங்கள். திருக்குர்ஆனில் உள்ள ஒவ்வொரு வசனத்தையும் நன்றாகச் சிந்தித்துப் பாருங்கள்.

திருக்குர்ஆனைவிடச் சிறந்த ஒன்று இருந்தால் அதைக் கொண்டு வாருங்கள்; அதுதான் சிறந்தது என்பதை நிரூபித்துக் காட்டுங்கள். அப்படி உங்களால் நிரூபிக்க முடியவில்லை என்றால் இந்த உண்மையை நீங்கள் ஏற்றே ஆகவேண்டும். அதன் பின்னரும் நீங்கள் இதை ஏற்கமறுத்தால் கடுமையாகத் தண்டிக்கப்படுவீர்கள் என இறைவன் கூறுகிறான்.

அவர்கள் இந்தக்குர்ஆனை ஆராய்ந்து பார்க்க வேண்டாமா? அல்லது அவர்களுடைய இதயங்களின் மீது பூட்டுப் போடப்பட்டு விட்டனவா? இதுதான் நேர்வழி என்பதைத் தெளிவாக அறிந்த பின்னரும், அதை ஏற்க மறுப்பவர்களுக்கு

அவர்களின் செயல்களை ஷைத்தான் (சத்தான்) அழகாகவும் பெரிதாகவும் காட்டுகிறான். (திருக்குர்ஆன் 47:24,25)

"இந்தக் குர்ஆனை முஹம்மத் பொய்யாகக் கற்பனை செய்துள்ளார்" என அவர்கள் கூறுகிறார்களா?

''நீங்கள் உண்மையாளர்களாய் இருந்தால், அல்லாஹ்வைத் தவிர்த்து உங்களுக்கு சாத்தியமான எல்லோரையுமே அழைத்துக் கொண்டு நீங்களும் இதைப்போன்ற கற்பனை செய்யப்பட்ட பத்து அத்தியாயங்களைக் கொண்டுவாருங்கள்'' என அவர்களிடம் கூறுங்கள்.

அவர்கள் உங்களுக்கு பதில் அளிக்காவிட்டால், ''இது ஏக இறைவின் ஞானத்தாலே அருளப்பட்டுள்ளது என்பதை அறிந்து கொள்ளுங்கள்! இன்னும், இறைவன் ஒருவனைத் தவிர வேறு கடவுள் இல்லை. இனிமேலாவது ஒரே இறைவனை மட்டும் முற்றிலுமாக வழிபடுவீர்களா?" என அவர்களிடம் கேளுங்கள். (திருக்குர்ஆன் 11:13,14)

சரி பத்து அத்தியாயம் என்பது அதிகம் என நீங்கள் கருதினால், ஓர் அத்தியாயமாவது கொண்டு வாருங்கள் என இறைவன் சவால் விடுகிறான்.

நம் அடியார் முஹம்மதுக்கு நாம் அருளியுள்ள இவ்வேதத்தை நீங்கள் சந்தேகப்பட்டு, அதில் நீங்கள் உண்மையாளர்களாக இருந்தால், ஏக இறைவனைத் தவிர உங்களின் உதவியாளர்கள் அனைவரையும் அழைத்துக் கொண்டு, இதைப் போல ஓர் அத்தியாயமாவது கொண்டு வாருங்கள்.

நீங்கள் அவ்வாறு செய்யாவிட்டால், உங்களை என்ன செய்வது? உங்களால் அவ்வாறு செய்யவே முடியாது! எனவே, தீய மனிதர் களையும், கற்களையும் எரி பொருளாகக் கொண்டு, இறைமறுப் பாளர்களுக்காகவே தயாரிக்கப்பட்டுள்ள நரகநெருப்பை அஞ்சி இந்த உண்மையை ஏற்றுக் கொள்ளுங்கள். (திருக்குர்ஆன் 2:23,24)

## இறைநம்பிக்கை - ஓர் இறைக்கொள்கை

இறைவன் மட்டுமே இவ்வுலகம் மற்றும் அதில் உள்ள ஒவ்வொன்றையும் படைத்துள்ளான்; அவனே அவற்றைப் பாதுகாத்தும் வருகிறான்.

இறைவன், அவன் ஒருவனே!
இறைவன் தனித்தவன்;

இறைவன் இணை துணை அற்றவன்;
இறைவன் நிகரற்றவன்;
இறைவனுக்கு நிகரில்லை.
இறைவனுக்கு மனைவியோ, மக்களோ, தாயோ, தந்தையோ இல்லை.
இறைவன் தனித்தவன்;
இறைவனுக்கு எவ்விதமான தேவையும் ஏற்படுவதில்லை;
இறைவன் நித்திய ஜீவன்;
இறைவனுக்கு அசதியோ, உறக்கமோ ஏற்படுவதில்லை.
இறைவன், அவன் மட்டுமே ஆதியும் அந்தமும்;
இறைவன், அளவற்ற அருளாளன், நிகரற்ற கருணையாளன்.
இறைவன், படைப்பினங்களின் வேண்டுதலைச் செவியுறுபவன்.
இறைவன், மனிதர்களின் பாவங்களையும் மன்னிப்பவன்.
இறைவன் ஒவ்வொன்றையும் உற்றுநோக்குபவன்.

இவை ஏக இறைவனின் பிரதானத் தன்மைகள். இத்தன்மைக ளைக் கொண்ட அல்லாஹ்வை மட்டுமே வணங்குவதுதான் நியாயமானது. படைப்பினங்களில் எதையும் மனிதன் வணங்கக் கூடாது. இதையே இஸ்லாம் பணிக்கிறது.

## யார் அந்த அல்லாஹ்?

இறைவனைக் குறிப்பதற்கு முஸ்லிம்கள் ‘அல்லாஹ்’ என்னும் வார்த்தையைப் பயன்படுத்துகிறார்கள். ‘அல்லாஹ்’ எனும் அரபுச் சொல் அகிலங்கள் மற்றும் அவற்றில் உள்ள அனைத்திற்கும் பொதுவான ஒரே இறைவனைக் குறிக்கிறது. The God என்னும் ஆங்கில வார்த்தைக்கு ஆங்கில மக்களின் கடவுள் என்று பொருள் கொள்ளமாட்டோம். இறைவனைக் குறிப்பதற்கு ஆங்கிலத்தில் பயன்படுத்தும் வார்த்தையே இது என்பதை நாம் நன்றாகவே அறிவோம். இதில் நமக்கு மாற்றுக் கருத்தே இருக்காது.

அல்லாஹ் அரபு மக்களின் கடவுள் அல்ல; முஸ்லிம்களுக்கும் மட்டும் உரிய கடவுளும் அல்ல. அகிலங்கள் மற்றும் அதிலுள்ள ஒவ்வொன்றுக்கும் பொதுவான ஒரே இறைவனைக் குறிக்கும் அரபுச் சொல்தான் அல்லாஹ். இச்சொல்லுக்கு பாலினமோ, பன்மையோ கிடையாது. பொதுவாக மற்ற மொழிகளில் இறைவனைக் குறிக்கும் சொல்லுக்கு பால் மற்றும் பன்மை இருக்கிறது. எனவேதான் அகிலங்கள் அனைத்திற்கும் பொதுவான இறைவனை முஸ்லிம்கள் அல்லாஹ் என்றே குறிப்பிடுகின்றனர்.

## மனிதன்

மனிதனால் இறைத் தன்மைகளை ஒருபோதும் பெறமுடியாது. மனிதன் மனிதனாகத்தான் இருக்கிறான். மனிதன் சக மனிதனை கடவுள் என்றோ, கடவுளின் அவதாரம் என்றோ கருதுவது பாவம். அது சாதாரணப் பாவம் அல்ல; மன்னிக்கமுடியாத பெரும் பாவம்.

மனிதன் மட்டும் அல்ல படைப்பினங்களில் எதுவும் இறைத் தன்மையைப் பெறமுடியாது. எந்த படைப்பினமும் கடவுளின் அவதாரம் எடுப்பதில்லை; எடுக்கவும் முடியாது. படைப்பினங்களின் எந்த உருவத்திலும் இறைவன் காட்சி தரமாட்டான். இறைவனை யாரும் கண்டதில்லை; இந்த உலகில் இறைவனை யாரும் ஒருபோதும் பார்க்கமுடியாது.

இவ்வாறுதான் எல்லா வேதங்களும் கூறுகின்றன; இறுதிவேதம் திருக்குர்ஆனும் இதையே கூறுகிறது. இறைத்தூதர்களும் இவ்வாறு தான் கூறினார்கள்.

## எது பெரும் பாவம்?

மனிதனையோ, ரிஷிகளையோ, முனிவர்களையோ, மத குருமார் களையோ அல்லது படைப்பினங்களில் ஏதேனும் ஒன்றையோ இறைவனாகக் கருதினால், அல்லது அவர்களுக்கு இறைத் தன்மை இருப்பதாகக் கருதினால் அதுதான் பாவங்களிலேயே பெரும் பாவம் என எல்லா வேதங்களும் கூறுகின்றன; இறைத்தூதர்களும் கூறினார்கள்.

இந்த அடிப்படையில் மனிதன் இறைவனை மட்டுமே வணங்க வேண்டும். எந்தச் சூழலிலும் ஒரு மனிதன் படைப்பினங்களுக்கு முன் எழுந்து நின்றோ, பணிந்து நின்றோ, தன் தலையைத் தரையில் வைத்தோ வணங்கவே கூடாது. அப்படி மனிதன் செய்வதை இறைவன் மன்னிக்கவே மாட்டான்.

தனக்கு இணைவைக்கப்படுவதை (துரோகம் செய்வதை) அல்லாஹ் மன்னிக்கவே மாட்டான். இதைத் தவிர எதையும், தான் நாடியவர் களுக்கு மன்னிப்பான். அல்லாஹ்வுக்கு இணைவைப்பவன் பெரும் பாவத்தையே கற்பனையாகச் செய்கிறான். (திருக்குர்ஆன் 4:48)

கொலை, கொள்ளை, மோசடி, துரோகம் என எத்தனையோ பாவங்கள் இருக்கும்போது, இறைவனுக்கு இணைவைப்பது எப்படி மன்னிக்க முடியாத பெரும் பாவமாகும் என்பது ஒரு கேள்வியாக நம்மைத் தொடரும்.

கொலை செய்வதை இறைவன் சிறிய பாவம் என்று கூறவில்லை.

கொலைக்குப் பதிலாகவோ, பூமியில் ஏற்படும் குழப்பத்திற்காகவோ (நீதிமன்றம் விதிக்கும் மரண தண்டனை) தவிர, ஒருவரைக் கொலை செய்பவன் ஒட்டுமொத்த மனிதர்களையும் கொலை செய்தவன் போலாவான். ஓர் உயிரை வாழவைத்தவர் மனிதர்கள் அனைவரையும் வாழவைத்தவரைப்போலாவார்... (திருக்குர்ஆன் 5:32)

பெரும் பாவங்களின் பட்டியலை குர்ஆன் சொல்கிறது; இறைத்தூதர் முஹம்மத்(ஸல்) அவர்களும் குறிப்பிட்டுள்ளார்கள். குற்றங்களுக்குத் தகுந்த தண்டனையை மனிதன் அடைந்தே ஆகவேண்டும். இதில் மாற்றுக் கருத்தில்லை. இறைவனுக்குச் செய்யும் பெரும் பாவம், இறைவன் மன்னிக்காத பாவம் எது என்பதுதான் முக்கியம்.

இந்த உலகத்திலேயே பெரிய பாவம் கொலையா, துரோகமா என உங்களிடம் கேட்டால் நீங்கள் என்ன பதில் கூறுவீர்கள்?

துரோகம் என்றுதானே கூறுவீர்கள்.

ஆம்! மிகச் சரியாகச் சொன்னீர்கள். துரோகம்தான் பெரிய பாவம். யாரை மன்னித்தாலும் துரோகியை மன்னிக்கக் கூடாது.

இறைவனுக்கு இணையாக ஒன்றை வணங்குவதற்கு உவமையாக கணவன் மனைவிக்கு இடையிலான உறவைக் கூறலாம்.

திருமண ஒப்பந்தத்தின் மூலம் நீங்களும் உங்கள் மனைவியும் இணைகிறீர்கள். உங்கள் இருவருக்கும் உரிய உரிமைகள் கடமைகள் உள்ளன. அவற்றை நீங்கள் முறையாகப் பின்பற்றிவரும் வரை உங்கள் இருவருக்கும் இடையில் சுமூகமான சூழல் நிழவுகிறது. உரிமைகள் கடமைகள் மீறப்படும் அல்லது மறுக்கப்படும்போது உங்கள் இருவருக்கும் இடையில் கசப்புணர்வு ஏற்படுகிறது.

உங்கள் மனைவி ஒரு தவறு செய்தால் அந்த தவறை நீங்கள் மன்னிக்கலாம் அல்லது சிறு தண்டனை கொடுக்கலாம். ஒரு கட்டத்தில் உங்கள் மனைவி உங்கள் பிள்ளையை அடிக்கும் போது தவறுதலாக படக்கூடாத இடத்தில் பட்டு உங்கள் பிள்ளை இறந்துவிடுகிறது என வைத்துக் கொள்வோம். பல்வேறு நடவடிக்கைகளுக்குப் பிறகு கடைசியாக அதைக் கூட நீங்கள் மன்னித்துவிடுவீர்கள்.

உங்கள் மனைவி உங்களை விட்டுவிட்டு வேறு ஓர் ஆணுடன் பாலுறவை மேற்கொண்டால் அதை உங்களால் மன்னிக்க முடியுமா?

ஆம்! தன்மானமுள்ள எந்த ஆணும் அதை மன்னிக்கவே மாட்டான். அந்தக் குற்றத்திற்குத் தகுந்த தண்டனையைக் கொடுக்காமல் விடவும் மாட்டான். சிலர் கோபத்தில் தன் மனைவியை கொலை கூட செய்துவிடுவார்கள். குறைந்த பட்சமாக விவாகரத்துச் செய்து அவளை கண்ணால் காணக்கூட மாட்டார்கள்.

உங்கள் மனைவி எங்கோ பிறந்து, வளர்ந்து, பருவ வயதில் உங்களுக்கு மனைவியாக வந்திருக்கிறாள். அவள் சுவாசிப்பதற்கு காற்றை நீங்கள் உருவாக்கித் தரவில்லை; அவள் பருகுவதற்கு தண்ணீரை நீங்கள் உண்டாக்கித் தரவில்லை; அவள் வாழ்வதற்குத் தேவையான இயற்கை வளம் எதையும் நீங்கள் ஏற்படுத்தித் தர வில்லை; இவை அனைத்தையும் உங்களுக்கும் உங்கள் மனைவிக்கும் இறைவன் ஏற்படுத்திக் கொடுத்துள்ளான்.

திருமணம் என்ற ஒப்பந்தத்தின் மூலம் உங்களிடம் மனைவியாக வந்துள்ள அவளுக்கு நீங்கள் அளிப்பது உணவு, உடை, இருப்பிடம் அவ்வளவுதான். இந்த மூன்றுக்காக அவள் உங்களிடம் மட்டுமே பாலுறவில் ஈடுபட வேண்டும்; வேறு யாருடனாவது ஈடுபட்டால் அதை மன்னிக்கவே முடியாது என்ற மனநிலையில் நீங்கள் இருக்கிறீர்கள்.

இறைவன் உங்களைப் படைத்து, உங்களுக்குத் தேவையான அனைத்தையும் படைத்து, உங்களைப் பாதுகாத்தும் வருகிறான். நீங்கள் அவனுக்கு நிகராக கல்லையும், மண்ணையும், மரத்தையும், கொடியையும், சமாதிகளையும், சிலைகளையும், விலங்குகளையும், கால்நடைகளையும், ஊர்வினங்களையும் கடவுள் என வணங்கி உங்களைப் படைத்த இறைவனை அசிங்கப்படுத்தினால் அவன் உங்களை எப்படி மன்னிப்பான். உங்களுக்கு ஒரு நியாயம்; உங்களைப் படைத்த இறைவனுக்கு ஒரு நியாயமா? யோசியுங்கள்.

“என் மனைவியுடன் ஓர் ஆண் இருப்பதை நான் கண்டால், என் னுடைய வாளால் அவனை நான் வெட்டாமல்விட மாட்டேன்” என ஸஅத் இப்னு உபாதா(ரலி) கூறிய செய்தி இறைத்தூதர்(ஸல்) அவர்களுக்கு எட்டியபோது,

“ஸஅத் அவர்களின் ரோஷத்தைக் கண்டு நீங்கள் வியக்கிறீர்களா? அல்லாஹ்வின் மீது ஆணையாக! நான் அவரைவிட அதிக

*ரோஷக்காரன்; அல்லாஹ் என்னைவிட ரோஷக்காரன்…" என இறைத்தூதர்(ஸல்) கூறினார்கள்.*

*அறிவித்தவர்: அபூ ஹுரைரா (ரலி), நூல்: ஸஹீஹ் முஸ்லிம் 3001*

## இறைமறுப்பு

*கடவுள் இல்லை; இல்லவே இல்லை என படைத்த இறைவனை மறுப்பது, இறைவனுக்குத் துரோகம் இழைக்கும் இணைவைத்தல் எனும் பாவத்திற்கு ஒப்பாகும். இப்பாவத்தையும் இறைவன் மன்னிக்கவே மாட்டான்.*

*நாம் பயன்படுத்தும் குண்டூசி முதல் ராக்கெட் வரை என ஒவ்வொரு பொருளின் தயாரிப்பிற்குப் பின்னால் ஒருவர் இருந்தால் மட்டுமே சாத்தியம் என்கிறபோது, இந்த அண்ட சராசரத்திலுள்ள எண்ணில் அடங்காப் படைப்பினங்கள் தாமாகத் தோன்றின என்பது அறிவுக்கே பொருந்தாத வாதம்.*

*ஒருவன் தன் பெற்றோரிடம் சென்று நீங்கள் என்னைப் பெறவே இல்லை; நான் நானாகவே தோன்றினேன் என வாதிட முடியுமா? இறைவனே இல்லை என மறுப்பது இதற்கு ஒப்பாகும்.*

*உன்னை மண்ணிலிருந்தும், பின்னர் ஒரு துளி விந்திலிந்தும் படைத்து, சீரான மனிதனாய் உன்னை ஆக்கிய இறைவனையா நீ மறுக்கிறாய்? (திருக்குர்ஆன் 18:37)*

## ஆதம்(அலை)

*முதல் மனிதர்; இறைவனின் முதல் தூதர்; மனித குலம் முழுமைக்கும் இவரே தந்தை. முஸ்லிம்களின் ஆதி பிதா ஒருவர்; கிறித்தவர்களின் ஆதி பிதா வேறு ஒருவர்; இந்துக்களின் ஆதி பிதா வேறு ஒருவர் என்பது கிடையாது. மனித குலத்தின் தோற்றம் ஒரே ஆண் ஒரே பெண்ணிலிருந்துதான் ஏற்பட்டது. இறைவனின் பார்வையில் மனிதர்கள் அனைவரும் சமம்; மனிதன் என்ற நிலைக்குப் பின்னர் தான் கொள்கை, கலாச்சாரம். மறுக்க முடியாத இன்றைய மருத்துவ விஞ்ஞானமும் இப்படித்தான் கூறுகிறது. இதைத்தான் இறைவன் கூறுகிறான்.*

*மனிதர்களே! உங்களை ஓர் ஆண், ஒரு பெண்ணிலிருந்தே நாம் படைத்தோம். நீங்கள் ஒருவரை ஒருவர் அறிந்து கொள்வதற்காக உங்களைக் கிளைகளாகவும், கோத்திரங்களாகவும் ஆக்கினோம். உங்களில் இறைவனை முறையாக அஞ்சி வாழ்பவரே இறைவனிடம்*

*மிவும் கண்ணியமானவர். இறைவனே அனைத்தையும் நன்கறிபவன்; மிகத்தெரிந்தவன். (திருக்குர்ஆன் 49:13)*

*ஆதிகாலத்தில் மனிதர்கள் அனைவரும் ஒரே சமுதாயமாகத்தான் வாழ்ந்தார்கள். வேற்றுமைகளும், வெறுப்புணர்வுகளும், மூட நம்பிக்கைகளும், இறைவனுக்கு இணைவைத்தல் என்னும் துரோகம் செய்யும் பண்பும் பின்னர்தான் மனிதனிடம் தோன்றியது.*

*மனிதர்கள் ஆரம்பத்தில் ஒரே கூட்டத்தாராகவே இருந்தனர். நற்செய்தி கூறுபவர்களாகவும், அச்சுறுத்தி எச்சரிப்பவர்களாகவும் தன் தூதர்களை அல்லாஹ் அனுப்பினான். அத்துடன் மனிதர்களிடையே ஏற்படும் கருத்து வேறுபாடுகளைத் தீர்த்துவைப்பதற்காக அவர்களுக்கு வேதத்தையும் சத்தியத்துடன் அருளினான். எனினும் அவ்வேதம் வழங்கப் பெற்றவர்கள் தெளிவான ஆதாரங்கள் வந்த பின்னரும் தங்களுக்கு இடையே உண்டான பொறாமையால் மாறுபட்டார்கள்.*

*எனினும், அவர்கள் மாறுபட்ட உண்மையின் பால் நம்பிக்கையாளருக்குத் தன் அருளால் ஏக இறைவன் நேர்வழிகாட்டினான். இவ்வாறே, ஏக இறைவன், தான் நாடியோரை நேர் வழியில் நடத்துகிறான். (திருக்குர்ஆன் 2:213)*

## நூஹ்(அலை)

*ஆதி பிதா ஆதமின் இறப்பிற்குப் பின்னர் மக்கள் கொஞ்சம் கொஞ்சமாக வழிதவறினர். ஷைத்தான் அவர்களிடம் உருவ வழிபாட்டை கொஞ்சம் கொஞ்சமாகப் புகுத்தினான். ஒரு கட்டத்தில் மக்கள் சிலை வணக்கத்தில் மூழ்கினார்கள். அப்போது தான் நூஹ் என்பவரை இறைவன் தன் தூதராக அனுப்பினான். நூஹ்(அலை) மக்களை ஓர் இறைக்கொள்கையின் பக்கம் அழைத்தார்கள். இறைவனுக்குத் துரோகம் இழைப்பதைக் கண்டித்தார்கள். இறுதியில் இறைவனை மட்டும் வணங்கும் சமுதாயம் மட்டுமே உலகில் இருக்கும் நிலை ஏற்பட்டது. அதன் பின்னரும் மக்களை ஷைத்தான் கொஞ்சம் கொஞ்சமாக வழிகெடுத்தான். மக்கள் இறைவனுக்கு இணைவைப்பதில் மூழ்கினர். பின்னரும் இறைவனின் பல தூதர்கள் வந்தார்கள். மக்களுக்கு சத்தியத்தை எடுத்துரைத்துக் கொண்டே இருந்தார்கள்..*

## இப்ராஹீம்(அலை)

இன்று உலகில் வாழும் மனிதர்கள் அனைவரின் தலைவர் என்ற நிலையில் இப்ராஹீம்(அலை) அவர்களை தன் தூதராக இறைவன் அனுப்பினான். அப்போது மக்கள் இயற்கையையும், அரசர்களையும் கடவுளர்களாக நினைத்து வணங்கிவந்தார்கள். அது இறைவனுக்குச் செய்யும் துரோகம் என்பதை தர்க்கரீதியாக விளக்கினார்கள்.

நம்ரூத் என்பவனுக்கு ஏக இறைவன் அரசாட்சி கொடுத்திருக்க இப்ராஹீமிடம் இறைவனைப் பற்றி தர்க்கித்தவனை (தூதரே) கவனித்தீரா?

“உயிர் கொடுத்து, மரணம் அடையும்படியும் செய்பவனே என் இறைவன்” என இப்ராஹீம் கூறினார்.

“நானும் உயிர் கொடுக்கிறேன்; மரணம் அடையும்படியும் செய்கிறேன்” என அரசன் கூறினான்.

நிச்சயமாக ஏக இறைவன் சூரியனைக் கிழக்கில் உதிக்கச் செய்கிறான்; நீ அதை மேற்கில் உதிக்கச் செய்!” என இப்ராஹீம் கூறினார்.

இறைவனை மறுத்த அரசன் திகைத்து வாயடைட பட்டுப்போனான்.

அநீதி இழைக்கும் கூட்டத்தாருக்கு ஏக இறைவன் நேர்வழி காட்டுவதில்லை. (திருக்குர்ஆன் 2:258)

“சிலைகளைக் கடவுளர்களாக எடுக்கிறீர்களா? உங்களையும் உங்கள் சமூகத்தாரையும், வெளிப்படையான வழிகேட்டிலேயே காண்கிறேன்” என இப்ராஹீம் தம் தந்தை ஆஜரிடம் கூறியதை நினைவுகூரும்.

இப்ராஹீம் உறுதியான நம்பிக்கை உடையவராகும் பொருட்டு வானங்கள், பூமி ஆகியவற்றின் ஆட்சியை அவருக்கு இவ்வாறு காண்பித்தோம். அவரை இரவு மூடியபோது, அவர் ஒரு நட்சத்திரத்தைப் பார்த்து, மக்களுக்கு உணர்த்துவதற்காக “இது என் இரட்சகன்” என்றார். அது மறைந்தபோது, “மறைபவற்றை நான் இறைவன் என நேசிக்கமாட்டேன்” என அவர் கூறினார்.

பின்னர், நிலவு உதிப்பதைக் கண்டு, மக்களுக்கு உணர்த்துவதற்காக “இது என் இரட்சகன்” என்றார். , அது மறைந்தபோது , “என் இரட்சகன் எனக்கு நேர்வழி காட்டவில்லையானால் நான் நிச்சயமாக வழிதவறியவர்கள் கூட்டத்தில் ஒருவனாய் ஆகி விடுவேன்” என அவர் கூறினார்.

*பின்னர் சூரியன் உதிப்பதைக் கண்டபோது, மக்களுக்கு உணர்த்து வதற்காக ''இது என் இரட்சகன்; இது பெரியது'' என்றார். அதுவும் மறையவே, "என் சமூகத்தாரே! நீங்கள் இணைவைப்ப வற்றை விட்டு நிச்சயமாக நான் விலகியவன்"*

*"வானங்களையும் பூமியையும் படைத்தவனின் பக்கமே நான் உறுதியாக என் முகத்தைத் திருப்பிக் கொண்டேன். இணைவைப் போரில் ஒருவனாக நான் இல்லை" என்றார்.*

*அவருடன் அவரின் கூட்டத்தார் விவாதித்தார்கள். அதற்கவர், "அல்லாஹ் எனக்கு நேர்வழி காட்டியிருக்கும் நிலையில் அவனைக் குறித்தா என்னிடம் தர்க்கம் செய்கிறீர்கள்? அவனுக்கு நீங்கள் இணை ஆக்குபவைக் குறித்து நான் அஞ்சமாட்டேன். என் இரட்சகன் நாடியதைத் தவிர எதுவும் நிகழாது. என் இரட்சகன் ஞானத்தால் ஒவ்வொரு பொருளையும் சூழ்ந்திருக்கிறான். இதை நீங்கள் சிந்திக்க வேண்டாமா?" எனக் கேட்டார்.*

*உங்களுக்கு அவன் எந்த சான்றையும் இறக்கி வைக்காதிருக்க நீங்கள் ஏக இறைவனுக்கு இணைவைப்பது குறித்து அச்சமற்றவர் களாய் இருக்கிறீர்கள்; நீங்கள் இணைவைப்பவற்றுக்கு நான் எவ்வாறு பயப்படுவேன்?*

*நம் இருபிரிவினரில் அச்சமின்றி இருக்கத் தகுதி உடையவர் யார் என்பதை நீங்கள் அறிந்திருந்தால், இவ்வாறு விவாதிக்க மாட்டீர்கள் என்றார். (திருக்குர்ஆன் 6:74-81)*

*இப்ராஹீம்(அலை) அவர்களின் வழித்தோன்றல்களில் ஏராளமான இறைத்தூதர்களை அல்லாஹ் அனுப்பினான். அளவை நிறுவையில் மோசடி செய்த கூட்டத்தின் பக்கம் ஷுஐப் என்னும் இறைத்தூதரை அல்லாஹ் அனுப்பினான். தன்னை இறைவன் எனக் கூறி மக்களை தனக்குப் பணிய வைத்த ஃபிர்அவ்ன் அரசன் மற்றும் அவன் கூட்டத்தாரின் பக்கம் மூஸா(அலை) அவர்களைத் தன் தூதராக இறைவன் அனுப்பினான். சில தூதர்களை அரசர்களாகவே அல்லாஹ் ஆக்கி இருந்தான். அவர்கள் அனைவரும் மக்களை நேர்வழிப்படுத்தினார்கள். ஒவ்வொரு தூதருக்கும் இறைவன் ஒரு தனிப்பட்ட ஆற்றலைக் கொடுத்திருந்தான். எந்தத் தூதரும் யாரையும் விட உயர்ந்தவரோ தாழ்ந்தவரோ அல்ல. இவர்களில் இப்ராஹீம்(அலை) அவர்களின் வம்சாவழியில் இறைவனின் இறுதித் தூதராக வந்தவர்தாம் முஹம்மத்(ஸல்).*

## முஹம்மத்(ஸல்)

முஹம்மத்(ஸல்) அவர்களைத் தன் தூதர்களில் இறுதியானவராய் இறைவன் தேர்ந்தெடுத்தான்.

முஹம்மத்(ஸல்) அவர்களே அகிலங்கள் அனைத்திற்கும் இறைவனின் இறுதித்தூதர் என்பது இஸ்லாமின் அடிப்படை.

மனித குலத்திற்கு வழிகாட்டும் வேதங்களை இறைத்தூதர்களுக்கு வானவர்களின் மூலம் அல்லாஹ் வழங்கினான். இறைத்தூதர்களில் ஒவ்வொருவருக்கும், "ஒரே இறைவனை மட்டும் வணங்கவேண்டும்" என்ற செய்தியைத்தான் வானவர்கள் கொண்டுவந்தார்கள். இறைவனிடமிருந்து வானவர்கள் கொண்டுவந்த செய்திகளின் தொகுப்பு இறைவேதமாகும். அவ்வேதங்களில் திருக்குர்ஆனும் ஒன்று. இறைவேதங்களில் இதுவே இறுதியானது. இவ்வுலக முடிவுநாள் வரை மனிதர்களுக்கு முழுமையான வாழ்வியல் வழிகாட்டியாக திருக்குர்ஆன் வழங்கப்பட்டுள்ளது.

முஹம்மத்(ஸல்) அரபுலகில் இறைத்தூதை முதன் முதலாக முன்வைத்தார்கள். அவர்கள் செய்து வந்த குற்றங்களை இனங் காட்டினார்கள். மனித குலத்தில் ஏற்பட்டிருந்த ஏற்படவிருக்கும் அனைத்துப் பிரச்னைகளுக்கும் தெளிவான தீர்வை இறைவன் இவர்கள் மூலம் ஏற்படுத்தினான். அந்தத் தொகுப்புதான் திருக்குர்ஆன் மற்றும் நபிமொழிகள். இந்த இரண்டில் உள்ளவை தான் இஸ்லாம். இந்த இஸ்லாம் எல்லோருக்கும் உரியதாகும். மனிதகுலம் முழுமைக்கும் உலகம் அழியும் நாள் வரை இதுவே வாழ்க்கை வழிகாட்டியாகும். இதைப் பின்பற்றுவதன் மூலமே மனிதன் இந்த உலக வாழ்க்கையிலும் மரணத்திற்குப் பிந்தைய வாழ்க்கையிலும் வெற்றிபெறுவான். இந்தக் குர்ஆன் மற்றும் நபிமொழிகளின் உள்ளடக்கம் என்ன என்பதை நாம் காண்போம்.

## மரணத்திற்குப் பின் ஒரு வாழ்க்கை

இவ்வுலக வாழ்க்கை நிரந்தரமானதன்று. இது ஒரு பயணத்தைப் போன்றது; இது ஒரு சோதனைக் களம். மரணத்திற்குப் பின்னரே மனிதனுக்கு நிரந்தரமான வாழ்க்கை இருக்கிறது என இஸ்லாம் கூறுகிறது. உலகம் மற்றும் இதில் வாழும் ஒவ்வொன்றையும் ஒரு நாள் இறைவன் முற்றிலுமாக அழித்து விடுவான். அதன் பின்னர் இறந்தவர்கள் அனைவரையும் இறைவன் உயிர்கொடுத்து எழுப்புவான். அவர்களை இறைவன் தனக்கு முன்பாக நிறுத்துவான். ஒவ்வொரு மனிதனின் செயல்கள் குறித்து நீதிவிசாரணை

நடத்துவான். பின்னர் அவரவரின் செயலுக்குத் தக்கவாறு கூலியும் கொடுப்பான்.

தர்மம் வெல்லும் என்கிறோம். ஆனால், இவ்வுலகில் அதர்மம்தான் வெல்கிறது. நீதிக்குத்தான் தண்டனை கிடைக்கிறது. அநீதிக்கு ஆதரவும் அரங்கேற்றமும் நடக்கிறது. அப்படியே சில நேரங்களில் தர்மம் வென்றாலும், அது தர்மத்திற்கான முழுமையான வெற்றியாக இருப்பதில்லை. எனவே, இறைவன் வழங்கும் நீதிதான் முழுமையான நீதி. இந்த மண்ணுலகில் முழுமையான நீதியை நாம் எதிர்பார்க்கவே முடியாது.

ஒரு கொலை செய்தவனுக்குத் தூக்குத் தண்டனை வழங்கப் படுகிறது என்றால் அங்கு நீதி நிலைநாட்டப்பட்டுவிட்டது. ஆனால், பல கொலைகள் செய்தவனுக்கும் ஒரு முறை தூக்குத் தண்டனை கொடுப்பதால் எப்படி நீதியை நிலைநாட்ட முடியும்? உண்மையில் அவனை பல முறை தூக்கில் போட்டு பல முறை மரணிக்கச் செய்ய வேண்டுமே. அவ்வாறு நம்மால் செய்ய முடியாதல்லவா? அவனுக்கு இறைவன் பல முறை உயிர் கொடுத்து பலமுறை மரண தண்டனையை மறுமையில் கொடுப்பான். அப்போதுதான் நீதி நிலைநாட்டப்படும். இப்படி சரியான முறையில் மனிதன் செய்த ஒவ்வொன்றுக்கும் நீதி வழங்கும் நாள்தான் மறுமை நாள். முஸ்லிம்கள் மட்டுமல்ல, மனித குலமே இதை நம்பித்தான் வாழவேண்டும்; நம்பாமல் வாழ்ந்தாலும் அந்த நாள் வரத்தான் போகிறது; அன்று இறைவன் நீதியை நிலைநாட்டியே தீருவான்.

## இறைநம்பிக்கையின் வெளிப்பாடு

இறைநம்பிக்கையாளர்களில் ஒவ்வொருவரும் மேற்குறிப்பிட்ட நம்பிக்கையை தன் வாழ்க்கையில் நடைமுறைப்படுத்துவதை இஸ்லாம் கட்டாயமாக்கியுள்ளது. இதைத் தங்களின் செயல் பாடுகளின் மூலம் முஸ்லிம்கள் வெளிக்காட்டுகிறார்கள். அந்தச் செயல்பாடுகள் உள்ளார்ந்த பொருளைக் கொண்டுள்ளது. சமூகக் கட்டமைப்பிற்கு வழிவகுக்கிறது.

## தொழுகை

மானக்கேடான மற்றும் தீய செயல்களைவிட்டும் மனிதன் தன்னைக் காத்துக் கொள்ளும் பொருட்டு ஒவ்வொரு நாளும் குறிப்பிட்ட ஐந்து நேரங்களில் இறைவனைத் தொழுவதை இஸ்லாம் கடமை யாக்கியுள்ளது. தொழுவதற்கு உடல், உடை, இடம் தூய்மையாய்

இருப்பது அவசியமாகும். மொத்தத்தில் தொழுகை மனிதனின் உள்ளத்தைத் தூய்மைப்படுத்துகிறது.

குறிப்பிட்ட நேரங்களில் தொழுகையை நிறைவேற்றுவது இறை நம்பிக்கையாளர்களின் மீது கடமை ஆக்கப்பட்டுள்ளது. (திருக்குர்ஆன் 4:103)

தொழுகையை நிலைநிறுத்துங்கள்! தொழுகை, நிச்சயமாக மானக்கேடானவற்றை விட்டும் தீயவற்றை விட்டும் தடுக்கிறது. அல்லாஹ்வின் தியானமே மிகப்பெரிதாகும். அல்லாஹ் நீங்கள் செய்பவற்றை நன்கறிகிறான். (திருக்குர்ஆன் 29:45)

மக்கள் தாங்கள் வசிக்கும் பகுதிகளில் தொழுகையை இறை இல்லங்கள் சென்று கூட்டாக நிறைவேற்ற வேண்டும் என இஸ்லாம் பணிக்கிறது.

இறைஇல்லங்களில் கூட்டாக நிறைவேற்றப்படும் தொழுகைகளில் ஒருவர் மற்றவரின் தோளோடு தோள் இணைத்து, வேற்றுமை யின்றி அணிவகுத்து நிற்கவேண்டும். எஜமான் அடிமை, முதலாளி பணியாள் இப்படி யார் இறைஇல்லம் வந்தாலும் ஓர் அணிதான்; பிரத்யேக அணிக்கு இங்கு இடமில்லை. நாட்டின் அதிபராய் இருந்தாலும், மத குருவாய் இருந்தாலும் முன்பு வந்தால் மட்டுமே முதல் அணியில் அமர்ந்து தொழ முடியும். தாமதமாக வருபவர் யாராக இருந்தாலும் பின்னால்தான் நிற்கவேண்டும்.

கூட்டுத் தொழுகை மனித குலத்தின் ஒற்றுமையை உணர்த்தி ஏற்றத்தாழ்வின் கருவை அறுத்துவிடுகிறது. முஸ்லிம் அல்லாத ஒருவர் இறைஇல்லம் வந்து கூட்டுத் தொழுகையில் பங்குபெற்று இறைவனைத் தொழ நினைத்தால் அவரைத் தடுக்கும் உரிமை யாருக்கும் கிடையாது. இஸ்லாம் எல்லோருக்கும் என குர்ஆன் கூறுவதை இங்கு உணரலாம்.

ஐவேளைக் கூட்டுத் தொழுகையின் மூலம் ஒரு பகுதியில் வசிக்கும் மக்களில் யார் தேவையுடையவர்கள்? யார் எந்த நிலையில் இருக்கிறார்கள்? அவர்களுக்கு நாம் என்ன உதவிகள் செய்ய வேண்டும்? அவர்களின் குடும்பங்களில் நடக்கும் துக்கமான பிற நல்ல காரியங்கள் என்ன? கல்வியில் பின்தங்கி இருப்பவர்கள் யார்? யாரிடமிருந்து உதவிகளைப் பெற்று யாருக்கு அளிக்கலாம் போன்ற சமூகக்கட்டமைப்பிற்கு வழிகாட்டுகிறது.

இந்தக் கூட்டமைப்பில் தன்னை இணைத்துக் கொள்வதற்கு

இஸ்லாம் கூறும் நிபந்தனை ஒன்று மட்டும்தான்; ஏக இறைவனைத் தவிர வேறு கடவுள் இல்லை; அவன் தனித்தவன்; அவனுக்கு இணை துணை இல்லை என நான் சாட்சி அளிக்கிறேன். முஹம்மத் இறைவனின் அடிமை மற்றும் தூதர் என்றும் நான் சாட்சி அளிக்கிறேன் என ஒருவர் தன் நாவால் மொழிந்து, அதை உள்ளத்தால் உறுதி கொண்டு அதன்படி செயல்பட்டால் போதும் என்ற நிபந்தனைதான் அது.

இப்படி ஒரு பலமான சமூகக் கட்டமைப்பின் பக்கம் நாம் திரும்புவது சிறந்ததா? அல்லது வேற்றுமை, பகைமை, பொறாமை, சண்டை, வசைபாடுதல், யார் உயர்ந்தவர் போன்ற ஏற்றத்தாழ்வின் கீழ் சிக்கித் தவிக்கும் சமூக அமைப்பில் வாழ்வது நமக்குச் சிறந்ததா என்பதை நாம்தான் முடிவு செய்யவேண்டும்.

மொத்தத்தில் இறைவன் நம்மைப் படைத்து, பாதுகாப்புடன் இந்த உலகில் வாழச் செய்திருப்பதற்கு நாம் நன்றி செலுத்தி, நம்மைக் காத்துக் கொள்வதே தொழுகை.

## நோன்பு

தனிமனித ஒழுக்கம் சமூகக் கட்டமைப்பில் மிகவும் முக்கியத்துவம் வாய்ந்தது. தனி மனித ஒழுக்கம் இல்லாத சமூகத்தால் சரியான சமூகக் கட்டமைப்பை உருவாக்கவே முடியாது.

நோன்பு இறைவனுக்கு மனிதன் செய்ய வேண்டிய கடமைகளில் ஒன்று என்றாலும், அது தனி மனித ஒழுக்கத்திற்கான பயிற்சி மற்றும் சிறந்த சமூகக் கட்டமைப்பிற்கு அடித்தளம் இடுவதாகவே உள்ளது.

ஆண்டிற்கு ஒருமுறை ‘ரமளான்’ மாதம் முழுவதும் பகலில் இறைவனுக்காக நோன்பு நோற்பது முஸ்லிம்கள் மீது கடமையாகும். உண்ணுதல், பருகுதல், பாலுறவு கொள்ளுதல் நோன்பாளிக்கு தடுக்கப்பட்டுள்ளது. அவ்வாறே பொய்பேசுதல், புறம் கூறுதல் உள்ளிட்ட தீயசெயல்கள் ஒவ்வொன்றும் நோன்பாளிக்குத் தடுக்கப்பட்டுள்ளது. இதன் மூலம் தியாகத் தன்மையும், தவறு செய்வதற்கு அஞ்சும் உணர்வும் மனிதனுக்கு ஏற்படுகிறது.

பொதுவாகவே மனிதனிடம், பலவீனம், சுயநலம், பதுக்கும் குணம், தவறிழைக்கும் பண்பு காணப்படுகின்றன. இவை போன்ற பாவங்களை எல்லாம் விட்டும் மனிதனைத் தூய்மைப்படுத்துவதே இறைவனின் நோக்கம். மனிதன் பகலில் சாப்பிடாமல் பசித்திருப்பது

இறைவனுக்குத் தேவையற்றது. மனிதனைச் சீர்படுத்தும் பயிற்சிக் களமாகவே இறைவன் நோன்பை அமைத்துள்ளான்.

இறைநம்பிக்கையாளர்களே! நீங்கள் இறையச்சம் உடையோராய் ஆவதற்கு, உங்களுக்கு முன்பிருந்தோரின் மீது கடமை ஆக்கப் பட்டது போலவே உங்கள் மீதும் நோன்பு கடமை ஆக்கப் பட்டுள்ளது. (திருக்குர்ஆன் 2:183)

நோன்பு கடமையாக்கப்பட்டதன் நோக்கமே இறையச்ச உணர்வை ஏற்படுத்துவதுதான்,

## ஜகாத்

மனிதன் பெற்றுள்ள பொருட்களிலிருந்து பிறருக்குச் செலவிடுதல் இறைவணக்கம் எனவும், ஜகாத் - செலவிடுதல் ஐம்பெரும் அடிப் படைக் கடமைகளில் ஒன்று எனவும் இஸ்லாம் கூறுகிறது.'ஜகாத்' எனும் அரபுச் சொல்லுக்கு 'தூய்மைப்படுத்துதல்' என்று பொருள்.

திருட்டு, ஊழல், பதுக்கல், தனிநபர் சுரண்டல் முதலிய குற்றங் களிலிருந்து மனிதனின் உள்ளத்தை ஜகாத் தூய்மைப்படுத்துகிறது.

வர்க்கப்பேதம், வணிகக்குற்றம் முதலிய தீமைகளை சமூகத்தை விட்டு அகற்றி முற்றிலும் தன்னிறைவான ஒரு சமுதாயத்தை உருவாக்குவதில் 'ஜகாத்' பெரும் பங்காற்றுகிறது.

பொருளாதாரச் சுழற்சியை மையப்படுத்தி தனி நபரிடம் தேங்கியுள்ள செல்வத்தில் இரண்டரை சதவீதத்தை சமுதாயத் திற்காக வழங்குவது ஜகாத் ஆகும்.

மனிதச் சட்டம் விதிக்கும் வரிகளுக்கு அப்பாற்பட்டு, ஜகாத் வழங்கிவருபவர் நலிவடைந்து போனால் ஜகாத் நிதியிலிருந்து அவரையும் இஸ்லாம் பயன்பெறச் செய்கிறது.

ஜகாத் கடமை நீங்கலாக ஒருவர் தம் பொருளிலிருந்து தாமாக முன்வந்து செலவிடுவதை இஸ்லாம் ஊக்குவிக்கிறது. இதை ஸதகா (தாமாக அளிக்கும் தர்மம்) என்பர்.

## ஹஜ்

அல்லாஹ்வை வணங்குவதற்கு உலகில் முதன்முதலாகக் கட்டப் பட்ட இறையில்லம் அரபு நாட்டிலுள்ள (சவூதி அரபியாவிலுள்ள) மக்காவில் இருக்கும் 'கஅபா'வாகும். உடல் மற்றும் பொருள் ரீதியாக தகுதியுள்ள ஒவ்வொருவரும் ஆயுளில் ஒருமுறை ஹஜ் கடமையை நிறைவேற்றியாக வேண்டும்.

*நிறம், மொழி, தேசம், ஏழை, பணக்காரன் போன்ற பாகுபாடின்றி அனைவரும் ஓர் ஆண் ஒரு பெண்ணிலிருந்து பிறந்தவர்களே என்பதை உறுதிபடுத்துவது ஹஜ்ஜின் நோக்கமாகும். மறுமை நாளில் மனிதர்கள் அனைவரும் இறைவனுக்கு முன்பாக ஒன்று திரட்டப்படுவதை ஹஜ் நினைவூட்டுகிறது.*

## இறைவணக்கத்தின் நோக்கம்

*மனிதன் படைக்கப்பட்டதன் நோக்கம், இறைவன் ஒருவனை மட்டுமே அவன் வணங்கவேண்டும்; அதாவது மனிதன் தன் வாழ்க்கை முழுவதும் இறைவனுக்குக் கட்டுப்பட்டவனாய் இறைச் சட்டங்களை ஏற்று அவற்றையே பின்பற்றவேண்டும்; இதன் மூலம் அமைதிக்கு உறுதியளித்து, அவன் ஒரு முன்மாதிரியாய்த் திகழவேண்டும்.*

*ஜின் இனத்தையும், மனித இனத்தையும் என்னை வணங்குவதற்காகவே (நான் அளித்துள்ள சட்டங்களின்படி வாழ்வதற்காவே) நான் படைத்துள்ளேன். (திருக்குர்ஆன் 51:56)*

*1. உயர்ந்த நிலை, 2. இடைநிலை, 3. தாழ்ந்த நிலை என மனிதவாழ்க்கையில் மூன்று படித்தரங்கள் உள்ளன. மனிதன் இவற்றில் உயர்ந்த நிலையில் வாழவேண்டும். ஏனெனில், மனிதனை இறைவன் உயர்ந்த நிலையில்தான் படைத்துள்ளான்.*

*அத்தியின் மீதும், ஒலிவத்தின் மீதும் சத்தியமாக! 'ஸினாய்' மலையின் மீதும் சத்தியமாக! அபயமளிக்கும் இந்த (மக்கா) நகரத்தின் மீதும் சத்தியமாக! நிச்சயமாக, மனிதனை மிகவும் அழகிய அமைப்பில் படைத்தோம். பின்னர், (அவனுடைய செயல்களின் காரணமாக) அவனைத் தாழ்ந்தோரிலும் மிகத் தாழ்ந்தவனாக ஆக்கினோம். நம்பிக்கை கொண்டு நற்செயல்கள் புரிவோர் தவிர, அவர்களுக்கு முடிவில்லாத நற்கூலி உண்டு. (திருக்குர்ஆன் 95:1-5)*

## இஸ்லாமிய வாழ்வியல்

*இஸ்லாம் ஒரு மதமாக நின்றுவிடாமல் வாழ்வின் அனைத்துத் துறைகளுக்கும் வழிகாட்டியாகத் திகழ்கிறது.*

## ஆன்மிக வாழ்க்கை

*இஸ்லாமிய வாழ்க்கைமுறை மனிதனை எப்போதும் இறை நினைவுடன் வாழச்செய்கிறது. இதனால் மனித வாழ்க்கையின் ஒவ்வோர் அம்சமும் வணக்கமாய் உள்ளது.*

## அறிவுப்பூர்வமான வாழ்வு

*மனிதன் இவ்வுலகில் காணும் ஒவ்வொன்றையும் ஆய்வு செய்து தெளிவுபட்ட நிலையில் இறைவனை ஏற்றுக் கொள்ள வேண்டும் என திருக்குர்ஆன் பணிக்கிறது. இதனால் மூடநம்பிக்கைக்கு அப்பாற்பட்ட அறிவுப்பூர்வமான சமுதாயம் உருவாகிறது.*

## தனிநபர் வாழ்க்கை

*தனிமனிதன் தொடர்பான உடல், உடை, வாழ்விடம், உறவுமுறை, பண்பாடு முதலியவற்றில் சீரிய ஒழுக்கமுறையை இஸ்லாம் கற்றுத்தருகிறது.*

## குடும்ப வாழ்க்கை

*குடும்ப வாழ்வு இஸ்லாமிய வழிகாட்டுதலாகும். திருமணம், விவாகரத்து, குழந்தை வளர்ப்பு, பெற்றோரைப் பேணல், உறவுமுறை பேணல் முதலியவை இதன் உள்ளடக்கமாகும். குடும்பத்திலுள்ள ஒவ்வோர் உறுப்பினருக்கும் உரிய உரிமைகளையும் கடமைகளையும் இஸ்லாம் வகுத்துள்ளது.*

## சமூக வாழ்க்கை

*குடும்பம் எனும் குறுகிய வட்டத்தை விட்டுவிட்டு அண்டை வீட்டார், உறவினர்கள், நண்பர்கள், வணிகத் தொடர்பாளர்கள், பணியாளர்கள் உள்ளிட்ட ஒவ்வொருவருக்கும் உரிய உரிமையை வழங்குமாறு இஸ்லாம் கட்டளையிடுகிறது. இதன் மூலம் மனிதம் காக்கப்படுகிறது.*

## பொருளாதார வாழ்க்கை

*மனிதன் தனக்குத்தேவையான வாழ்வாதாரங்களைத் தேடிக் கொள்வதை இஸ்லாம் வலியுறுத்துகிறது. ஆனால், பொருளா தாரம் என்பது இறைவனால் மனிதனின் பொறுப்பில் விடப் பட்டுள்ளது. எனவே, பொருளை ஈட்டுவதற்கும் அதைச் செலவிடு வதற்கும் இஸ்லாம் சில ஒழுங்குமுறைகளை வகுத்துள்ளது. சுரண்டல் முறைப் பொருளாதாரமான வட்டியை இஸ்லாம் வன்மையாகத் தடுத்துள்ளது; சூதாட்டம் மற்றும் ஏமாற்றும் வழி ஒவ்வொன்றையும் தடுத்துள்ளது இதன் பெரும் எடுத்துக்காட்டு.*

## அரசியல் வாழ்வு

*ஆட்சி அதிகாரம் இறைவனுக்கே உரியதாகும். எனவே, இறைச் சட்டங்களின் அடிப்படையில் மட்டுமே ஆட்சி அமைய வேண்டும். இறைச்சட்டத்தால் மட்டுமே பாகுபாடு அற்ற, சுதந்திரமான நீதியை வழங்கமுடியும்.*

*மனிதன் இயற்றிய சட்டங்களால் வாழ்வில் ஏற்படும் பிரச்சினைகளுக்கு சரியான தீர்வைக் காணமுடியாது. இது நிதர்சனம். இதனால்தான் பெரும்பாலான நாடுகளில் அவ்வப்போது சட்டங்கள் மாற்றியமைக்கப்படுகின்றன.*

## சர்வதேச வாழ்வு

*சர்வதேச அமைதியை ஏற்படுத்துவதே இஸ்லாத்தின் நோக்கமாகும். மனிதர்கள் அனைவரும் ஒரு தந்தை, தாயின் வழித் தோன்றல்களே! இது இஸ்லாமின் அடிப்படை. ஒரு மனிதனின் உயிர், உடமை, கண்ணியம் அனைத்தும் புனிதமிக்கவை. தேசங்களுக்கிடையே வரம்பு மீறுதல் தடைசெய்யப்பட்டதாகும். அதே வேளையில், தேசியப் பாதுகாப்பு மற்றும் இஸ்லாமிய கொள்கைச் சுதந்திரத்தைக் காப்பதற்காக நடவடிக்கை எடுத்துக் கொள்வதற்கும் இஸ்லாம் வழிவகுத்துள்ளது. பெண்கள், குழந்தைகள், துறவிகள், முதியவர்கள், பயன்தரும் செடி கொடிகள் முதலியவற்றை அழிப்பதற்கு போரிலும் கூட தடைச்சட்டம் உள்ளது.*

## வாழ்வின் நோக்கம்

*ஒவ்வொரு மனிதனின் வாழ்வின் நோக்கம் வெற்றியை இலக்காகக் கொண்டே இருக்கிறது. வாழ்க்கையில் பல துறைகளில் பல நிலைகளில் நாம் வெற்றி பெறலாம். ஆனால், நிலையான வெற்றி தானே நமக்குத் தேவை? நிலையான வெற்றி இரு நிலைகளில் உள்ளது.*

***1. உலக வாழ்க்கையில் வெற்றி***

*தன்னைப் படைத்த இறைவன் மீது மனிதன் முழுமையான நம்பிக்கை கொள்ள வேண்டும். அதன் வெளிப்பாடாக நற்செயல்கள் புரிய வேண்டும். தன் நாவாலும் கையாலும் மனிதர்களுக்கு நல்லதை மட்டுமே செய்து உலகில் அமைதியை ஏற்படுத்த வேண்டும்.*

***2. மறுமை வாழ்க்கையில் வெற்றி***

*நாம் இறந்தப் பிறகு மீண்டும் உயிர் கொடுத்து உறுதியாக எழுப்பப் படுவோம். அதுவே மறுமை வாழ்க்கையாகும். அதில் நாம் இறைவனின் தண்டனையைப் பெற்று நரகத்திற்குச் செல்லாமல், நற்கூலியைப் பெற்று சுவர்க்கத்தில் வாழ்வதே பெரும் வெற்றியாகும். இரண்டாம் வெற்றிக்கு முதல் வெற்றியே அடிப்படை. உலக வாழ்க்கையில் தோற்றவன் மறுமை வாழ்க்கையிலும் தோற்று விடுவான்; உலக வாழ்க்கையில் வென்றவன் மறுமை வாழ்க்கையிலும் வெல்வான். இந்த இரண்டு வெற்றிகளையும் ஈட்டுவது நம் கையில் தான் இருக்கிறது.*

* * * * * * *

இஸ்லாம், மனிதர்களுக்கான இறைமார்க்கம்;
திருக்குர்ஆன், மனிதர்களுக்கான வாழ்வியல் வழிகாட்டி.
அதன்படி சுமார் 53 ஆண்டு காலங்கள் ஒரு சமூகம்
வாழ்ந்து வழிகாட்டிச் சென்ற மறுக்கமுடியாத வரலாறு
நம் கண்முன்னே உள்ளது.

திருக்குர்ஆன், அரபுமொழி அமைந்துள்ள மந்திரச்
சொற்கள் அல்ல; அது கவிதைத் தொகுப்பும் அல்ல;
கற்பனைக் காவியமும் அல்ல. ஆன்மிகம், குடும்பம்,
சமூகம், அரசியல், பொருளாதாரம், வணிகம்,
இராணுவம், பாதுகாப்பு, சுதந்திரம், அண்டை அயலார்,
உறவுகள் மற்றும் நாட்டு மக்களுக்கான உரிமைகள்
கடமைகள், தொழில் நியதி, நிதி, நீதி, துறைசார்ந்த
சட்டவிதிகள் என மனித வாழ்க்கைக்குத் தேவையான
முழுமையான வாழ்வியல் நூலே திருக்குர்ஆன்.

நம்மையும் நாம் உலகில் காணும் ஒவ்வொன்றையும்
படைத்தவன் ஒரே இறைவன். அந்த இறைவனே இச்சட்ட
நூலை மனிதர்களுக்கு வழங்கியுள்ளான். உலக மக்கள்
அனைவருக்கும் இதில் உரிமை உள்ளது. இது இறைவன்
அளித்துள்ள உரிமை.

**IPRC - Islamic Publications & Research Centre**
Madurai, Tamil Nadu, India.
For Contact: +91 9364414441 E-mail: iprcindia2000@gmail.com